"த்வாஸுபர்ணு ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே, தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யந ச்நந்நந்யோ அபிசாகசீதி". என்று ஒட்டை நீங்கி விளங்காநிற்கு மென்று. [ஒழிவிலன்பரந்த] - பரந்தே ஒழிவிலன். இப்படி ஸகலத்திலும் வ்யாபித்துநிற்கும். [அந்நலனுடை யொருவனை] - முதற் பாட்டிற் சொன்ன அத்யந்தவிலக்ஷணமாய் அந்தரங்கதமமாயிருந்துள்ள நித்யவிபூதியையும் இரண்டாம் பாட்டிற் சொன்ன அத்விதீயமான திவ்யாத்ம ஸ்வரூபத்தையு முடையனனவனை. இந்த லீலாவிபூதியோடேகூட. [நணுகினம்] - கிட்டப்பெற்றேம். [நாமே] - அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே மங்கி பகவத்கதா கந்தரஹித ரான நாம், இப்படி உபயவிபூதியுக்தனுயிருந்துள்ள ஸர்வேச்வரனைப் பூர்ணமாக அநுபவிக்கப்பெற்றேம். "அவன் துயரறு சுடரடி தொழுதெழென் மனனே" என்று அந்வயம். "மந்யேப்ராப்தா:ஸ்ம தம்தேசம் பரத்வாஜோ யமப்ரவீத்" என்கிற ஸ்ரீபரதாழ்வானைப்போலே இப்படி பெறுவோமே யென்று விஸ்மிதராகிறார். "வாநராணும் நராணும்ச கதமாஸீத் ஸமாகம:" [நாமே] - "கிந்நுஸ்ஸ்யாச்சித்தமோஹோZயம்" - இது ஏதேனும் ப்ரமஸ்வப்நாதிகளோ வென்றாற்போலே.

ஈ·டு:—மூன்றும்பாட்டு.—முதற்பாட்டிலே ப்ராதாந்யேந கல்யாணகுணயோகத்தையும் நித்ய விபூதியோகத்தையும் விக்ரஹவைலக்ஷண்யத்தையும் அநுபவித்து, அவற்றுக்கு ஆச்ரய மான திவ்யாத்மஸ்வரூபம் சிதசித்விலக்ஷணமுமாய் உபமாநரஹிதமுமாயிருக்கு மென்று இரண்டாம்பாட்டாலே அருளிச்செய்து நின்றார்; அவற்றோடே சேர ஒருகோவையாய்த் தோற்றுமிறே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதியும் இவர்க்கு; *நோபஜநம் ஸ்மரந் இதம்சரீரம்* என்னுநிற்கச்செய்தே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதியும் உத்தேச்யமாகா நின்றதிறே முக்தனுக்கு; இவர்க்கும் கர்மநிபந்தநமான ஆகாரமும் கிடக்கச்செய்தே மயர்வற மதிநலம் அருளப்பெற்றவராகையாலே ததீயத்வாகாரமும் தோற்றி அநுபவிக்கிறார். ராஜாக்களுக்கு நாடெங்கும் செல்லாநிற்கச்செய்தே மஹிஷிகளும் தாங்களுமாகச் சில பூந்தோட்டங்களைக் குடநீர்வார்த்து ஆக்குவது அழிப்பதாய் லீலாரஸம் அநுபவிக்குமா போலே *திருவிண்ணகர் சேர்ந்தபிரான் பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடை மூவுலகு" என்கிறபடியே ஸர்வேச்வரனும் பெரியபிராட்டியாருமாகக் கடாக்ஷித்தபோது உண்டாய் இல்லையாகில் இல்லையாய் அவர்களுக்கு லீலாரஸவிஷயமாயிருக்கிற லீலா விபூதியை அநுபவிக்கிறார்.

[இலனதுவுடையனிதென நினைவரியவன்] அதுஇலன், இதுஉடையன் என நினைவரிய வன். அநுபூதமாயிருப்பதொன்றைச் சொல்லி அதிலன் என்றவாறே அதொழிந் தத்தை யுடையவ னென்று தோற்றும்; ஒன்றைக்காட்டி இத்தையுடையவனென்றவாறே இதொழிந்ததில்லையாய்த்தோற்றும். இலனது என்றால் பரிச்சிந்ந விபூதிகளும்; உடையனிது என்றால் இதொழிந்ததில்லாமையாலே அல்பவிபூதிகளும்; இரண்டுவழியாலுமாக ஐச்வர்யம் குறைந்து தோற்றும். என - இப்படியிருக்குமென. [நினைவரியவன்] - அநுபபந்நங்களைச் சேர்த்து நினைக்கலாமிறே: ஓர் ஊசி நிற்கிறதாகவும், அதின்மேலே கலசம் இருக்கிறதாகவும், அதின்மேலே சால் இருக்கிறதாகவும், அதின்மேலே மஹாமேரு இருக்கிறதாகவும், இப்படி அநுபபந்நங்களைச் சேர்த்து நினைக்கலாமிறே; அப்படியேதான் மநோரதத்துக்கு விஷயமா யிருக்குமோ? என்னில்,-மநோரதஸமயத்திலும் பரிச்சேதிக்கவரியனு யிருக்கும். ஆனால், இவனைச்வர்யத்தைப் பேசும்படியென்? என்னில், - [நிலன் இத்யாதி] - *பதிம் விச்வஸ்ய* என்னுமித்தனை. 'நிலனிடை' என்கிறவிது பாதாளந்தளவும் நினைக்கிறது; 'விசும்பிடை' என்கிறவிது பரமபதத்துக்கு இவ்வருகுள்ளத்தையெல்லாம் நினைக்கிறது. [உருவினன்] - உருக்களையுடையான். [அருவினன்] - அருக்களையுடையான். 'இனன்' என்ன, உடையவ னென்று காட்டுமோ? என்னில்; "காராயின காளநன்மேனியினன்" என்றால், மேனியை யுடையவனென்று காட்டுமாபோலே. ஆக, கீழ்மேலுண்டான சேதநாசேதநங்களை யுடையா னென்றபடி. இத்தால், ப்ராதேசிகமான ஐச்வர்ய முடையவர்களதன்று லீலாவிபூதி; ஸர்வாதிகன தென்கை. இப்படி ஸர்வத்தையுமுடையவனுய்த்தான் போகத்தில் அந்யபரனுய்க் கோயிற்சாந்துபூசி நித்யவிபூதியிலே யிருக்குமோ? என்னில், - [புலனெடு] - இவை பட்டத் தைத் தானும் பட்டு உடன்கேடனுய்நின்று நோக்கு மென்கிறது. புலன் என்கிறது - புலப் படும் பதார்த்தங்களை. *த்ருச்யதே ச்ரூயதேZபி வா* என்கிறபடியே ப்ரமாணகோசரங்களான

பதார்த்தங்களை. [ஒடு] - *தத்ஸ்ருஷ்ட்வா* என்கிறபடியே இவற்றை யுண்டாக்கி, ஜீவத்வாரா அநுப்ரவேசித்து, பின்னை இவற்றுக்கு வஸ்துத்வ நாமபாக்த்வங்களுண்டாம்படி பண்ணி, *அந்த:ப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்கிறபடியே ஸர்வாந்தராத்மாவாய் நிற்கும்படியைச் சொல்லுகிறது. ஆனால், பின்னை தான் ஸர்வாத்மாவாய் நின்றால் அசித்தினுடைய பரிணாமாதிகளாதல், சேதநருடைய ஸுகித்வ து:கித்வங்களாதல் தனக்கு ஸ்பர்சிக்கும்படியிருக்குமோ? என்னில், - [புலனலன்] - தந்தர்மாவல்லன். *த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே, தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி, அநச்நந்நந்யோ அபிசாகசீதி* என்று தாமொட்டற்று நின்று விளங்காநிற்கும். [ஒழிவிலன் பரந்த] - ஒருவஸ்துக்கமொழியாமே இப்படிவ்யாபித்திருக்கு மென்னவுமாம்; அன்றியே, காலபரமாக்கி, எல்லாக்காலத்திலும் எல்லா வஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கு மென்னவுமாம். [அந்நலனுடையொருவனை] - கீழிரண்டுபாட்டாலும் சொன்ன குணவிசிஷ்டஸ்வரூபத்தை நினைத்து 'அந்நலனுடையொருவனை' என்கிறார். [நணுகினம்] - "மயர்வறமதிநலமருளினன்" என்கிற ஜ்ஞாநமாத்ரமன்றிக்கே கிட்டப்பெற்றோம். [நாமே] - இது பொய்யோ? *கிந்நு ஸ்யாச்சித்தமோஹோZயம்* - இது ஏதேனும் ப்ரமஸம்பாநிகளோ? என்றாப்போலே. இவர் ஈச்வரோZஹமென்றால் அவனுக்கும் குடிவாங்க வேண்டும்படியாயிறே இருப்பது; அஹமென்றால் அவனளவிலே பர்யவஸிக்க வேண்டும்படியாயிருக்க, தேஹத்தளவிலேயாம்படியாகவிறே முன்பு போந்தது; *மங்யே ப்ராப்தாஸ்ம தம்தேசம் பரத்வாஜோ யமப்ரவீத்* - கைகேயி "ராஜந்" என்று ஸம்போதிக்கும்படி பிறந்து, ஸ்ரீபரத்வாஜபகவான் 'அவள்மகனுக்கு கீழ்வயிற்றுக்கழலையறுக்க வருகிறானோ?' என்று *கச்சிந்நதுஷ்டோ வ்ரஜஸி* என்னும்படியான நான் அவன் சொன்ன ஆச்ரமத்திலே புகுந்தேனோ? என்று சங்கியாநின்றேறனென்றானிறே. *வாநராணாம் நராணாஞ்ச கதமாஸீத் ஸமாகம:* - காட்டிலே வர்த்திக்கக் கடவ குரங்குகளுக்கும் நாகரகரான சக்ரவர்த்திபிள்ளைகளுக்கும் ஒருசேர்த்தியுண்டானபடி எங்ஙனே? என்ன, *ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத* - பெருமாளும் மஹாராஜரும் சேர்ந்த சேர்த்தி, பின்னே பிறந்த இளையபெருமாள் நிற்க அடியேன் அந்த:புர கார்யத்துக்கு வரும்படியாகவிறே; நானும் இங்ஙனே கூடிக்கொண்டு நிற்கக்கண்டேனிந்தனை. [நாமே]-இவ்வநுபவத்துக்குப் புறம்பான நாம். பகவத்கதாகந்தரஹிதரான நாம் [நாமே] - இது பொய்யோ ?

நாமவனிவனுவன் அவளிவளுவளெவள்*
தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது*
விமவையிவையுவை அவைநலந்தீங்கவை*
ஆமவையாயவை ஆய்நின்றவவரே. (4)

ஒ.—இத்திருவாய்மொழியில், சேஷித்த பாட்டுக்களால் இம்மூன்றும்பாட்டில் பொருளே விஸ்தரிக்கப்படுகிறது. நாலாம்பாட்டு. நாநாவிதமான சொற்களாலே சொல்லப்படுகிற எல்லாப் பதார்த்தங்களினுடைய ஸ்வரூபஸ்வபாவம் பகவதநிநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறது

'நாமவனிவனுவன் என்கிறது' - தந்தாமையும் தூரஸ்தனையும் ஸந்நிஹிதனையும் அதூரவிப்ரக்ருஷ்டனையும் சொல்லுகிறது. 'அவளிவளுவளெவள் என்கிறது' - தூரஸ்தையாயும் ஸந்நிஹிதையாயும் அதூரவிப்ரக்ருஷ்டையாயும் வினவப்படுமவளுமான ஸ்த்ரீலிங்க பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [தாமவரிவருவர்] - பூஜ்யராயுள்ளாரில் தூரஸ்தராயும் ஸந்நிஹிதராயும் அதூரவிப்ரக்ருஷ்டராயு முள்ளாரைச்சொல்லுகிறது. 'அதுவிதுவுதுவெது' என்றது - தூரஸ்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயும் வினவப்படுவதுமான நபும்ஸக பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [விமவையிவையுவை] - நச்வரமான பதார்த்தங்களில் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயும் தூரஸ்தமாயுமுள்ள பதார்த்

தங்களைச் சொல்லுகிறது. [அவைநலந்தீங்கவை] - அவற்றில் நல்லனவும் தீயனவும். [ஆமவையாயவையாய்நின்ற அவரே] - ஆகக்கடவனவும், பண்டேயானவையும் ஆய்நின்ற பதார்த்தங்கள் அவரே. இப்பாட்டிற்சொன்ன ப்ரயோஜநங்கள் ஓரிடத்திலுண்டாய் ஓரிடத்திலின்றிக்கே ஒழிந்தவை இல்லாத விடத்தில் போக்யமானவை கூட்டிக்கொள்ளக்கடவது.

இ.—இனி இத்திருவாய்மொழியில் குறையும் இந்த லீலாவிபூதியை விஸ்தரேண பேசுகிறார். நாலாம்பாட்டில், இதினுடைய ஸ்வரூபம் தததீநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறார்.

[நாமவனிவனுவன்] - தந்தாமும், தூரஸ்த்தனும், ஸந்நிஹிதனும், அதூரவிப்ரக்ருஷ்டனும். [அவளிவளுவளெவள்] - தூரஸ்த்தையும், ஸந்நிஹிதையும் அதூரவிப்ரக்ருஷ்டையும், வினவப்படுமவளும். [தாமவரிவருவர்] - பூஜ்யராயுள்ளாரில் தூரஸ்தரும், ஸந்நிஹிதரும், அதூரவிப்ரக்ருஷ்டரும். [அதுவிதுவுதுவெது] - தூரஸ்த்தமாயும், ஸந்நிஹிதமாயும், அதூர விப்ரக்ருஷ்டமாயுமுள்ளவையும், வினவப்படுமதாயுமுள்ளவையும். [வீமவையிவையுவை] - நச்வரபதார்த்தங்களில் ஸந்நிஹிதமாயும், தூரஸ்தமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [அவைநலந்தீங்கவை] - அவற்றில் நல்லனவும் தீயனவும்; நன்மையும், தீமையு மென்னவுமாம். [ஆமவையாயவை] - ஆகக்கடவனவும், பண்டேயானவையும். [ஆய்நின்ற அவரே] - ஆகாநின்ற அவரே. இவையெல்லாம் ஆகாநின்றார் ப்ரக்ருதரானவர். ஸகல பதார்த்தங்களிலும் அந்தராத்மதயா ஸத்தாஹேதுவாய் நிற்கையாலே ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறது. இப்பாட்டிற் சொன்ன ப்ரயோஜநங்கள் ஓரிடத்திலே உண்டாய் ஓரிடத்திலின்றிக்கே யொழிந்தவற்றை இல்லாதவிடத்திலே யோக்யமானவற்றைக் கூட்டிக்கொள்ளக்கடவது. ஸ்த்ரீபுந்நபும்ஸக பேதத்தாலும், பூஜ்யபதார்த்தங்கள் நச்வரபதார்த்தங்களென்கிற பேதத்தாலும் விலக்ஷணாவிலக்ஷண பேதத்தாலும், பூதபவிஷ்யத்வர்த்தமாநகால பேதத்தாலும் வந்த விசேஷங்களாலே ஸகலசேதநாசேதநங்களையும் ஸங்க்ரஹித்து அவற்றினுடைய ஸ்வரூபம் பகவததீந மென்றதாய்விட்டது.

*ஈடு:—நாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே ததீயத்வாகாரத்தாலே அவன் குணங்களோபாதி உத்தேச்யமாய்த் தோற்றுகையாலே லீலாவிபூதி யோகத்தை அநுபவித்தார்; இனிமேலிற்பாட்டுக்களெல்லாம் லீலாவிபூதிவிஷயமாயிருக்கிறது. நித்யவிபூதியில் வந்தால் அவ்விபூதி பாவஜ்ஞுமாய் அவனுடைய ச்சந்தத்தைப் பின்செல்லுமதாயிருக்கும்; "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்னும்படியாயிறே இருப்பது; கர்மபந்தமான அசித்ஸம்ஸர்க்கத்தோடே கூடி ஈச்வரஸங்கல்பத்தைப் பின்செல்லுமதாயிருக்கும் இந்த விபூதி. அந்த விபூதியில் வந்தால் அவ்விருப்புக்கண்டு உகக்குமதுக்கு அவ்வருகு ஒன்றுமில்லை; அங்ய சேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்கள் நடையாடுகிறது இவ்விபூதியிலேயாகையாலே இரண்டையும் தவிர்த்து பகவததீநமென்று சொல்ல வேண்டுவது இங்கேயாயிருந்தது. இனி ஒரு மூன்று பாட்டாலே இதனுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் பகவததீநமாயிருக்குமென்று, ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் ஸம்பந்தம் சரீராத்மபாவமென்று குத்ருஷ்டிகளை நிரஸித்து, சூந்யவாதியை நிரஸித்து, வ்யாப்திஸௌகர்யத்தைச் சொல்லி, பலத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறார். அதில் ஸ்வரூபம் அவனதீந மென்கிறார் இப்பாட்டில். அதாகிறபடி எங்ஙனே? என்னில்,—ஸ்ருஷ்டிகாலத்திலே வந்தவாறே இவற்றையுண்டாக்கி ஜீவத்வாரா அநுப்ரவேசித்து, வஸ்துத்வ நாமபாக்த்வங்களும் உண்டாம்படி பண்ணியும், இது அடங்கலும் அழிந்தவன்று சக்த்யவஸ்த்த ப்ரபைபோலே தன்பக்கலிலே ஸூக்ஷ்மரூபேண கிடக்கும்படி ஏறிட்டுக்கொண்டு தரித்தும், காரணதசையோடு கார்யதசையோடு வாசியறத் தன்னைப்பற்றி ஸ்வரூபஸ்தித்யாதிகளாம்படி இருக்கையாலே ஸ்வரூபம் அவனதீநமென்கிறது. அதில், லோகத்தில் ஸகல பதார்த்தங்களையும் தனித்தனியே சொல்லி, 'இதினுடைய ஸ்வரூபம் அவனாலே, இதினுடைய ஸ்வரூபம் அவனாலே' என்னில், பணிப்படுமிறே ஜீவாநந்த்யத்தாலே; இப் ப்ரயோஜநத்திலே சொல்லிவிடுமன்று, ப்ரதிபத்திக்கு விஷயமாகாது; ஆகையாலே, தேவாதி பதார்த்தங்களை நாலுமூன்று வகையாலே சேர்த்து அவற்றினுடைய ஸ்வரூபம் அவனதீநமென்கிறார்.*

*[நாம் அவன் இத்யாதி] நானென்றும், நாமென்றும், யானென்றும், யாமென்றும் தந்தாமைச் சொல்லக்கடவது. ஸந்நிஹிதமென்ன, தூரஸ்த்தமென்ன, அதூரவிப்ரக்ருஷ்ட*

மென்ன, வினவப்படுகிறதென்ன, [அவள் இவள் உவள் எவள்] - ஸ்த்ரீலிங்க நிர்த்திஷ்ட வஸ்துக்களைச் சொல்லுகிறது. [தாம்] பஹுமந்தவ்யரை. [அது] நபும்ஸகலிங்க நிர்த்திஷ்ட வஸ்துக்களைச் சொல்லுகிறது. [வீமவை] நச்வரபதார்த்தங்கள். [நலம்தீங்கு] நன்மை தீமை என்னுதல், நன்ருனவை தீதானவை என்னுதல். [ஆமவையாயவை] - கழிந்தவற்றிலும் வருமவற்றிலும் அடைப்புண்ணுமிறே வர்த்தமாநம். [ஆய்நின்ற] ஆய்நின்ற பதார்த்தங்கள். இவற்றைப் பதார்த்தத்தனவிலே கொண்டபோது மேல் ஐக்யஞ் சொல்லப் போகாது; அசித்தும், அசிதபிமாநியான ஜீவனும், ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவுமான இஸ்ஸங்காதமித்தனைக்கும் வாசகமாயிருக்கிறது இச்சப்தம். [அவர்] இவையாய் நிற்கிருர் அவர். "இதம் ஸர்வம் ப்ரஹ்மகலு" என்னுமாபோலே. "தத்த்வமஸி" என்ருப்போலேயிருக்கிறது. முதற்பாட்டிலே கல்யாணகுணயோகத்தையும் நித்யவிபூதியோகத்தையும் விக்ரஹவைலக்ஷண்யத்தையும் சொல்லி, இரண்டாம் பாட்டிலே ஸ்வரூபவைலக்ஷண்யத்தையும் சொல்லிற்று; தச்சப்தம் ப்ரக்ருத பராமர்சியாகையாலே 'அவர்' என்று கல்யாணகுணவிசிஷ்ட வேஷத்தைச் சொல்லி, 'ஆய்நின்ற' என்று அசிஜ்ஜீவவிசிஷ்டபரமாத்மாவைச் சொல்லி ஸாமாநாதிகரண்யத்தாலே ஐக்யம் சொல்லுகிறது. ஆக ஸ்த்ரீபுந்நபும்ஸக பேதத்தாலும், பூஜ்யபதார்த்தங்கள் நச்வரபதார்த்தங்களென்கிற பேதத்தாலும், விலக்ஷண விலக்ஷண பேதத்தாலும், பூத பவிஷ்யத் வர்த்தமாந காலபேதத்தால் வந்த விசேஷங்களாலும், ஸகல சேதநாசேதநங்களையும் ஸங்க்ரஹித்து அவற்றினுடைய ஸ்வரூபம் பகவததீநமென்றதாய்விட்டது.

**அவரவர்தமதமது அறிவறிவகைவகை***
**அவரவிறையவர் எனவடியடைவர்கள்***
**அவரவிறையவர் குறைவிலிறையவர்***
**அவரவர்விதிவழி அடையநின்றனரே*** **(5)**

ஒ.—அஞ்சாம் பாட்டில், ஸகலபதார்த்தங்களுடைய ஸ்த்திதியும் எம்பெருமானாலே என்கிறது.

[அவரென்று தொடங்கி] - தந்தம் ப்ரக்ருத்யநுகுணமாக விவிதபலாபிஸந்தியையுடைய அதிகாரிகள் தந்தாமறிந்த மார்க்கபேதங்களாலே தங்களுடைய அபேக்ஷித பலப்ரதாநசக்தரான அவ்வவ தேவதைகளை இவர்களே நமக்கு அஸாதாரணஸ்வாமிகளென்று ஆச்ரயிப்பர்கள். [அவரவரென்று தொடங்கி] - ஆச்ரயணீயர் ஆச்ரயிக்கிறவர்களுடைய அபேக்ஷிதம் செய்கைக்கு குறையுடையரல்லர்; ஆச்ரயிக்கிறவர்கள் ஆச்ரயணீயரை வித்த்யுக்தப்ரகாரமே ஆச்ரயிக்கவும், அவர்கள் அவர்களுக்கு பலப்ரதாநசக்தராகவும், ஸர்வேச்வரன் அந்தராத்மதயா நின்ருன்.

**இ.—ஸ்த்திதியும் பகவததீநையென்று வையதிகரண்யத்தாலே சொல்லுகிறது.**

[அவரவர்] - ஸத்த்வாதிகுணபேதத்தால்வந்த ப்ரக்ருதிபேதத்தைச் சொல்லுகிறது [தமதமது] - குணபேதத்தால் வந்த பலபேதத்தைச் சொல்லுகிறது. [அறிவறி] - 'அதுக்கு அடியான ஜ்ஞாநபேதத்தைச் சொல்லுகிறது. [வகை வகை] - மார்க்கபேதங்களாலே. [அவரவர்] - அவ்வோபலப்ரதாநத்துக்கு சக்தராக ஸ்வீகரித்த தேவதைகளை [இறையவரென] - அவரவர்களே தந்தாமுக்கு ஸ்வாமிகளென்று. [அடியடைவர்கள்] - ஆச்ரயிப்பர்கள். அடியடைவர்களென்று - ஸ்வகோஷ்டீப்ரஸித்தியாலே அருளிச் செய்கிருர். [அவரவர் இறையவர்] - அவ்வோதேவதைகள். [குறைவிலர்] - ஆச்ரயிக்கிறவர்களுடைய பலம்கொடுக்கைக்குக் குறையுடையரல்லர். [இறையவர்] - நிருபாதிக ஸர்வேச்வரன். [அவரவர் விதி வழியடைய] - ஆச்ரயிக்கிறவர்கள் வித்யுக்த ப்ரகாரத்தாலே ஆச்ரயிக்கவும், ஆச்ரயணீயர் அவர்களுக்கு பலப்ரதாநத்துக்கு சக்தராகவும். [நின்றனர்] - அந்தராத்மதயா நின்ருர்.

ஈடு :—*அஞ்சாம் பாட்டு.—ஸ்வரூபம் அவனதீநமானவோபாதி ஸ்த்திதியும் அவனதீநை யென்கிருர்.*

[அவரவர் இதம்பாதி] -ஒருவன் ஒரு க்ருஹத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் ஒரு க்ராமத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் ஒரு ஜநபதத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் த்ரைலோக்யத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் சதுர்த்தசபுவநத்துக்குக் கடவனாயிருக்கும்; ஆக, சதுர்த்தசபுவநத்துக்குக் கடவனானவனோடு, ஒரு க்ருஹத்துக்குக் கடவனானவனோடு வாசியற அவர்கள் ரக்ஷகராகிறதும், இவை ரக்ஷ்யமாய் உபகாரங்கொண்டதாகிறதும் ஸர்வேச்வரன் அந்தராத்மாவாய் நின்று நடத்துகையாலே; அவன் இப்படி நடத்திக்கொண்டு போராதவன்று இவர்கள் ரக்ஷகராகமாட்டார்களென்கிறார். *நஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம் நஹி பாலநஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்*- எல்லா நன்மைகளையும் பண்ணித்தரவல்லனாய் விரோதிகளையும் போக்கவல்லனானவனை யொழிய வேறொருவர் பக்கலில் இந்த ரக்ஷகத்வம் கிடவாது. *யத்வேதாதௌ ஸ்வர: ப்ப்ரோக்தோ வேதாந்தேச ப்ரதிஷ்ட்டித:* - செப்பிலேகிடந்த ஆபரணத்தை வாங்கிப்பூண்டு, பின்னையும் அவ்வாபரணத்தை வாங்கிச் செப்புக்குள்ளேயிட்டு வைக்குமா போலே ஆத்யந்தபீஜமாயிருக்கிறதுயாதொன்று: *தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய*-அதுதன்னுடைய ப்ரக்ருதியிலே லீநமாயிருக்கிறதாகிறது- அகாரம். அது ரக்ஷகனைக் காட்டுவதொன்றிறே. *ய:பரஸ்ஸ மஹேச்வர:* - அதுக்கு வாச்யதயா பரனாயிருக்கிறான் யாவனொருவன், அவன் ஸர்வேச்வரனென்றதிறே [அவரவர்] - தம்முடைய அநாதரமும், அவர்களுடைய வைவித்யமும் தோற்றுகிறது. [தமதமது] - குணபேதத்தால் வந்த பலபேதத்தைச் சொல்லுகிறது. [அறிவறி] - அதுக்கு அடியான ஜ்ஞாநபேதத்தைச் சொல்லுகிறது. [வகைவகை] - மார்க்கபேதங்களாலே. [தமதமதறிவறிவகைவகை] - சேதநபேதத்தோபாதியும் போருமாயிற்று ருசிபேதங்களும். தந்தாமுடைய குணாநுகுணமாகப் புறம்பே ஆச்ரயிப்பாரும் ஆச்ரயணீயராயிருப்பாருமா யிருக்குமிறே. ரஜோகுணப்ரசுரராயிருப்பாரும் தமோகுணப்ரசுரராயிருப்பாரும் அளவான ஸத்வத்தையுடையரா யிருப்பாருமாயிறே இருப்பது, அப்படியே குணாநுகுணமாகப்பிறந்த ஜ்ஞாநமும். அறிந்தவறிந்த வகைகளாலே. [அவரவர் இறையவரென] - அவ்வவர் ஆச்ரயணீயரென்று. [அடியடைவர்கள்] - அவ்வவதேவதைகள் தான் துராராததேவதைகளாய், 'ப்ரஜையை ஈறுத்துத்தா' 'ஆட்டையறுத்துத்தா'. என்னாநிற்கச்செய்தேயும், ஆச்ரயணமாவது - அவற்றின் காலிலே குனியுமதுக்கு அவ்வருகில்லை யென்றிருக்கிறார்இவர், ஸ்வகோஷ்டீப்ரஸித்தியாலே; ஓரஞ்சலிஸாத்யவஸ்துவோபாடயிறே தமக்கு வாஸனை, *அஞ்சலி: பரமா முத்ரா க்ஷிப்ரந்தேவ ப்ரஸாதிநீ*; *க்ருதாபராதஸ்ய ஹி தே நாந்யத் பச்யாம்யஹம் க்ஷமம் அந்தரேணாஞ்சலிம் பத்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்* - இளையபெருமாளுடைய ஜ்யாகோஷத்தைக் கேட்டு மஹாராஜர் கழுத்தில் மாலையையறுத்துப்போகட்டுக் காபேயமாய்ச் சில வ்யாபாரங்களைப் பண்ணி, அருகே நின்ற திருவடியைப் பார்த்து 'இவ்வளவில் நமக்குச் செய்யவடுப்பதென்?' என்ன, 'அபராதகாலத்திலே அநுதாபம் பிறந்து மீண்டோமாய் எளியன சில செய்கிறோமல்லோம்; நிரக்கழிய அபராதம் பண்ணினபின்பு இனி ஓரஞ்சலி கோராமற்போகாது' என்றானிறே. இப்படி குறைநிகளாய் ப்ராப்தனாயிருக்கிறவனோட்டை வாஸனையாலே 'அடியடைவர்கள்' என்கிறார். மாமலர்நீர்சுடர் தூபங்கொண்டு தொழுதெழுது மென்னுமிது மிகையாயிறே இவர்பற்றின விஷயம் இருப்பது. [அவரவர் இறையவர் குறைவிலர்] - ஆச்ரயிக்கிறவர்களுடைய இறையவரென்னுதல், அவ்வவாச்ரயணீயரானவர்களென்னுதல். அவர்களுக்கு ஆச்ரயணீயரானவர்கள் அவர்களுக்கு பலப்ரதாநசக்தராகைக்குக் குறையுடையரல்லர். அதுக்கு அடியென்? என்னில்,—[இறையவர்] -பொதுவிலே 'இறையவர்' என்கிறார், அவர்களோடு, அவர்களாச்ரயிக்கிற தேவதைகளோடு, தம்மோடு வாசியற எல்லார்க்கு மொக்க இறையவராகையாலே; *பதிம் விச்வஸ்ய* என்கிறபடியே எல்லார்க்கு மொக்க ஸ்வாமியானவர். [அவரவர் விதிவழி யடைய நின்றனரே] - அவ்வ வாச்ரயணீயர் தந்தாமுடைய ஆகமாதிகளிலே விதித்துவைத்த ப்ரகாரங்களிலே அடையும்படியாக நம் இறையவர் அந்தராத்மாவாய் நின்றார். அன்றிக்கே, ஸர்வேச்வரன் காமநாதிகாரத்தில் அருளிச்செய்தபடியே அவர்களடையும் படியாக வென்னுதல். ஸர்வேச்வரன் இராமடமூட்டுவாரைப்போலே முகந்தோற்றாதே அந்தராத்மாவாய் நின்று நடத்துகையாலே அவர்களும் ஆச்ரயித்தார்களாய், இவர்களும் பலப்ரதாநசக்தராகிறார்களித்தனை; அவனை யொழிந்தவன்று இவர்கள் ஆச்ரயிக்கவும்

மாட்டார்கள், அவர்கள் பலப்ரதாநம் பண்ணவும் மாட்டார்களென்கிறார். அய்யன்பாழியில் ஆனை பேர்க்கு உரித்தாமன்றாயிற்று அவ்வோதேவதாமாத்ரங்களுக்கு பலப்ரதாநசக்தி யுள்ளது.

நின்றனரிருந்தனர் கிடந்தனர்திரிந்தனர்*
நின்றிலரிருந்திலர் கிடந்திலர்திரிந்திலர்*
என்றுமோரியல்வினர் எனநினைவரியவர்*
என்றுமோரியல்வொடு நின்றவெந்திடரே. (6)

ஒ.—ஆறும்பாட்டில், சேதநாசேதநாத்மக ஸமஸ்த வஸ்துக்களுடைய ஸமஸ்த ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் பகவத்ஸங்கல்பாதீந மென்கிறது.

'நின்றனர் இருந்தனர்' என்று தொடங்கி. [என்றுமொரியல்வினர் என்று தொடங்கி] - அநேக ப்ரகாரனுயிருக்கையாலே ஒரு ப்ரகாரத்தைச் சொல்லி இதுவே படி யென்று ஒருநாளும் பரிச்சேதிக்க அரியனுய் அபரிச்சேத்யதைகஸ்வருபனுய் இப்படி ஸூத்ருடப்ரமாண ஸித்தனு புள்ளவர். 'எம்' என்று - ஸ்வலாபத்தைச் சொல்லுகிறது. நாலாம்பாட்டிலே ஸ்வருபதாதநீ்யம் ஸித்தமாகை யால் இப்பாட்டில் ப்ரவ்ருத்திநிவ்ருத்த்யம்ச தாதநீ்யத்திலே தாத்பர்யமாயிற்று; "அருணயா பிங்காக்ஷ்யா ஸோமங்க்ரீணுதி" என்கிறவிடத்தில் ஆருண்யாதிகளே விதேய மானுற்போலே.

**இ.—ஆறும்பாட்டில்; ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் பகவத்ஸங்கல்பாதீநைகளென்று ஸாமாநாதி கரண்யத்தாலே சொல்லுகிறது.**

**[நின்றனர் இத்யாதி] - ஸகல சேதநாசேதநங்களுடைய ஸகல ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளும். விசேஷ்யபர்யந்தாபிதாநம் பண்ணுநிற்க. இங்ஙனே சொல்லுமதென்? என்னில்;—"நாமவன்" என்கிற பாட்டிலே ஸ்வருபஞ்சொல்லுகையாலே இப்பாட்டில் ப்ரவ்ருத்திநிவ்ருத்தி மாத்ரத்தையே நினைக்கிறது: அருணுதிகரணத்தில் ஆருண்யாதிகளே விதேயமானுப்போலே. [நின்றனர் இத்யாதி] - ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் ததநீைக மென்கிறது. நிவ்ருத்தி ததநீை யாவதென்? ஏறிட்ட கட்டி விழும்போது ஒருநியாமகர் வேணுமோ? என்னில்; — வேணும்; ஸ்வர்க்கத்தினின்றும் விழுகிற த்ரிசங்குவுக்குத் தன்னுல் முடிய விழவொண்ணுமையாலே. [என்று மொரியல்வினரென நினைவரியவர்] - அநேக ப்ரகாரனுகை யாலே ஒருப்ரகாரத்தையே சொல்லி இது இப்படியென்று ஒருநாளும் பரிச்சேதிக்க அரியவர். [என்று மொரியல்வொடுநின்ற] - என்றுமொக்க இப்படி அபரிச்சேத்யதைகஸ்வபாவராயிருக்கை. [எம்திடரே]- இப்படி ஸூத்ருட ப்ரமாண ஸித்தர். 'எம்' என்று தமக்கு இவ்வர்த்தம் ப்ரகாசிக்கையாலே ஸ்வலாபத்தைச் சொல்லுகிறது.**

*ஈடு:—ஆறும்பாட்டு—லீலாவிபூதியினுடைய ஸ்திதியும் பகவத்ஸங்கல்பாதீநமென்றார் கீழ்; அதினுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியும் பகவத்ஸங்கல்பாதீந மென்கிறார் இதில்.*

*[நின்றனர் இத்யாதி] - நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் என்றும், நில்லாமை இராமை கிடவாமை திரியாமை என்றும் சொல்லக் கடவதிறே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளே. பகவத்வ்ய திரிக்த ஸமஸ்தவஸ்துக்களுடையவும் ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளைச் சொல்லுகிறது இப் பன்மையால். ஆக்ருதிவாசகசப்தம் வ்யக்தியிலே பர்யவஸித்து நிற்குமாபோலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு வாசகமான சப்தமும், அபர்யவஸாநவ்ருத்த்யா அவனளவிலே சென்றல்லது நில்லாது.* *அருணயா பிங்காக்ஷ்யா ஸோமங்க்ரீணுதி* *என்கிற விடத்தில் குணவிசிஷ்டவஸ்து தோற்றுநிற்கச்செய்தேயும் ஆருண்யாம்சத்திலே தாத்பர்யமாகிறாப்போலே, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி களுக்கு ஆச்ரயமான வஸ்துக்களினுடைய ஸ்வருபம் அவனதீநமென்று முன்னே சொல்லு கையாலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்த்யம்சத்திலே நோக்கென்று சொல்லுவாருமுண்டு; அப்போது ஸாமாநாதிகரண்யம் ஸித்தியாது; ஆக, ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கு வாசகமான இச்சப்தம்*

அவற்றுக்கு ஆச்ரயமான சேதநனைக் காட்டி, அவன் தனக்கு ஈச்வரனையொழிய ப்ருதக்ஸ்திதி யாதல் உபலம்பமாதல் இல்லாமையாலே அவனளவுங் காட்டுகிறது; ஆக, விசிஷ்ட வஸ்துவையே காட்டுகிறது. ப்ரவ்ருத்தி அவனதீநையாகிறது வேணுமாகில்; நிவ்ருத்திக்கு அவன் வேணுமோ?' என்று எம்பாரைக் கேட்க, 'ஸ்வர்க்கத்தினின்றும் விழுகிற த்ரிசங்குவை சக்திமான் நிற்கச் சொல்ல நிற்கவேண்டிற்றுக் கண்டாயே; அப்படியே நிவ்ருத்திக்கும் அவன் வேணுங்காண்' என்று அருளிச்செய்தார். [என்றுமொரியல்வினரென நினைவரியவர்] - இப்படி அநேக ப்ரகாரராயிருக்கையாலே காலதத்வமுள்ளதனையும் ஆராயாநின்றாலும் இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தையுடையவனென்று நினைக்கவுங்கூட அரியவர். [என்று மொரியல்வொடு நின்ற] விருஷலவிவாஹ மந்த்ரம்போலே, என்றும் ஓரியல்வொடு நின்றவராவது என்? என்னில் ;—என்றும் ஒருபடிப்பட்ட ஸ்வபாவத்தை யுடையவரென்று நினைக்க அரிதான நிலை, என்றும் ஒருபடிப்பட்டிருக்குமென்கை. [எம்திடர்] அபௌருஷேயமான வேதப்ரதிபாத்யனாகையால் வந்த தார்ட்யத்தைச் சொல்லுகிறது. இப்படி ஸ்ருஷ்ட ப்ரமாண ஸித்தரான நிலை தம்முடைய லாபமாய்த் தோற்றுகையாலே, 'எந்திடர்' என்கிறார். நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர் நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலரான இவையெல்லாம், என்றுமொரியல்வினரென நினைவரியவராய் என்றும் ஓரியல்வொடு நின்ற எந்திடரானவர்.

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை*
படர்பொருள்முழுவதுமாய் அவையவைதோறும்*
உடல்மிசையுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன்*
சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே. (7)

ஒ.—ஏழாம்பாட்டில், கீழ்மூன்றுபாட்டிலாகச் சேதநாசேதந பதார்த்தங்களினுடைய ஸ்வரூப ஸ்திதிப்ரவ்ருத்திகள் பகவததீநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலுமாகப் பேசி, அந்தஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநமான ஜகதீச்வரர்களுக்கு உண்டான சரீரசரீரிபாவ ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. 'ஜகத்தினுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் பகவததீந மாகையாலே இந்த ஜகத்து அவனுக்கு சரீர மென்கிறது' என்றுஞ் சொல்லுவர்.

[திடவிசும்பு என்று தொடங்கி] - ஸ்வகார்யமான பூதசதுஷ்டயங்களுண்டாவதற்கு முன்பே உண்டாய் அவை நசித்தாலும் தான் சிலநாள் நிற்குமதான ஆகாசம் முதலான பூதபஞ்சகங்களையும் உபாதாநமாகக் கொண்டு கார்யமாய் விஸ்த்ருதமாகாநின்றுள்ள தேவாதிபதார்த்தங்களையெல்லாம் உண்டாக்கி. இங்கு ஆகாசத்துக்குச் சொன்ன தார்ட்யம் லோகாயதாதிமதநிராஸபரம்; எரியாவது- தேஜஸ்ஸு, வளியாவது - காற்று. [அவையவை யென்று தொடங்கி] - அவ்வவபதார்த்தங்கள்தோறும் சரீரத்தில் ஆத்மாவைப்போலே தாரகனுமாய் நியந்தாவுமாய்க் கொண்டு வ்யாப்யபதார்த்தங்களுக்குத் தெரியாமே வ்யாபித்து, அவ்வளவன்றிக்கே அப்பதார்த்தங்களுடைய புறம்பும் வ்யாபித்து, காலத்திலே இவற்றை ஸம்ஹரிப்பதுஞ் செய்த ஸர்வேச்வரன், முதற்பாட்டுத் தொடங்கிச் சொன்னபடியே பௌருஷேயத்வ நிபந்தநமான விப்ரலம்பாதி தோஷரஹிதமுமாய், அபாதிதப்ரமாணமுமாகையாலே மிக்க தேஜஸ்ஸை யுடைத்தாய், ஒருவரால் பண்ணப்பட்டதன்றிக்கே என்றும்கேட்டே வருகையாலே ச்ருதியென்று சொல்லப்படுகிற வேதத்திலே ப்ரதிபாத்யனுக்கொண்டு உளன். தாம் அநுஸந்தித்த அர்த்தத்துக்கு ச்ருதியை ஸாக்ஷியாகச் சொல்லுகையாலே ச்ருதியிற்சொல்லுகிற ச்ரிய:பதித்வமும் நாராயணசப்தவாச்யத்வமும் அநுஸந்தித்தாராகவேணும். இவ்வர்த்தத்தில் நிர்த்தோஷச்ருதியே ப்ரமாணமாகப் பிடிக்கையாலே வேதவிருத்தரான பாஹ்யரும், ஜகதீச்வரர்களுக்கு அந்யதாஸம்பந்தஞ் சொல்லும் குத்ருஷ்டிகளும் அர்த்தாத் ப்ரதிக்ஷிப்தரானார்கள்.

இ.—ஏழாம்பாட்டில், கீழ் மூன்றுபாட்டிலே சேதநாசேதநங்களுடைய ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் பகவததீநங்க ளென்று ஸாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலும் சொல்லிற்று; அந்த ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் ஜகதீச்வரர்களுடைய சரீராத்மபாவ ஸம்பந்த மென்கிறது.

ஜகத்தினுடைய ஸ்வரூபாதிகள் பகவததீநங்களாகையாலே இந்த ஜகத்து அவனுக்கு சரீர மென்று சொல்லிற்றாகவுமாம்.

[திடவிசும்பு] - த்ருடமான விசும்பு. ஸ்வகார்யமான பூதசதுஷ்டயத்துக்கு முன்பே யுண்டாய் அவை நசித்தாலும் சில நாள் நிற்கக்கடவதாகையாலே ஸ்திரமான ஆகாச மென்கிறது; இது முதலான பூதபஞ்சகங்களென்ன: [இவைமிசை படர் பொருள்] - இவற்றின் கார்யமாய் விஸ்த்ருதமாகாநின்றுள்ள தேவாதி பதார்த்தங்களென்ன: [முழுவதுமாய்] - இந்த ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்கி. ஆகாசத்துக்குச் சொன்ன தார்ட்யம் லோகாயதாதிமத நிராஸ பரம். வளி - காற்று. [அவையவைதொறும்] - அவ்வவபதார்த்தங்கள்தோறும். [உடல்மிசை உயிரென] - சரீரத்தில் ஆத்மாவைப்போலே தாரகனுமாய், நியந்தாவுமாய், சேஷியுமாய்; "பூதேந்த்ரியாந்த:கரணபுருஷாக்யம்ஹி யஜ்ஜகத். ஸ ஏவ ஸர்வபூதாத்மா விச்வரூபோ யதோZவ்யய:" [கரந்து] - வ்யாப்ய பதார்த்தங்களுக்குத் தெரியாமே. [எங்கும் பரந்து] - உள்ளும் புறம்பும் வ்யாபித்து. [இவையுண்டசுரன்] - ப்ரளயதசையிலே இவற்றை ஸம்ஹரித்த ஸர்வேச்வரன். [உளன் சுடர் மிகு சுருதியுள்] - முதற்பாட்டுந் தொடங்கிச்சொன்ன அர்த்தங்களெல்லாவற்றுக்கும் ப்ரமாணம் நிர்த்தோஷ ச்ருதியென்கிறது சுடர்மிகுகையாவது - பௌருஷேயத்வநிபந்தநமான விப்ரலம்பாதிதோஷ ரஹிதமுமாய், ப்ரமாணாந்தரங்களைக் கொண்டு பாஹ்யகுத்ருஷ்டிகளால் அபிசால்யமாகையாலே மிக்கதேஜஸ்ஸை யுடைத்தாகை. ஒருத்தரால் பண்ணப்பட்டதன்றிக்கே என்றுங் கேட்டேவருமதாகையாலே ச்ருதி யென்கிறது. [உளன்] - இப்படிப்பட்ட ச்ருதியிலே ப்ரதிபாத்யனாய்க்கொண்டு தோற்றினவன். தாம் அநுஸந்தித்த அர்த்தங்களுக்கு ச்ருதியை ஸாக்ஷியாகச் சொல்லுகையாலே அதிற் சொல்லுகிற ச்ரிய:பதித்வமும் நாராயணசப்த வாச்யத்வமும் அநுஸந்தித்தாராகவேணும்; இவர்க்கு நிர்த்தோஷச்ருதியே ப்ரமாணமாகையாலே பாஹ்யரும், ஜகதீச்வரர்களுக்கு அந்யதாஸம்பந்தஞ் சொல்லும் குத்ருஷ்டிகளும் அர்த்தாத் ப்ரதிக்ஷிப்தரானார்கள்.

ஈடு :—ஏழாம்பாட்டு—[திடவிசும்பு இத்யாதி]-கீழ் ஸாமாநாதிகரண்யம் சொன்ன இது-பாவிப்ரதிஸந்தாந ந்யாயத்தாலேயாய், அத்தால் பலித்த ஸம்பந்தம் சரீராத்ம பாவம் என்கிறாரதல்; அன்றியே, கீழே ஸாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலும் சொன்னார்: அப்படி சொன்ன ஐக்யத்துக்கு நிபந்தநம் சரீராத்மபாவம் என்கிறாரதல். *அநேந ஜீவேநாத்மநாZநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி* என்கிறபடியே த்ரிவ்ருத்க்ருதமான அசித்திலே ஜீவத்வாரா அநுப்ரவேசித்து வஸ்துத்வ நாமபாக்த்வங்களுண்டாம்படி பண்ணி, இவைதானென்னலாம்படி யிருந்தால் 'ம்ருதாத்மகோ கட:' என்னும்படி யிருக்கையன்றிக்கே, *அந்த:ப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்கிறபடியே ஸர்வேஷாம் ஆத்மாவாய், இவற்றை நியமிக்குமிடத்தில் இந்த சரீரத்துக்கு இந்த ஆத்மா தாரகனாய் நியாமகனாய் சேஷியாயிருக்கிறாப்போலே *யஸ்யாத்மா சரீரம்* *யஸ்ய ப்ருதிவீ சரீரம்* என்கிறபடியே தான் இரண்டுக்கும் தாரகனாய் நியாமகனாய் சேஷியாய் நின்று நடத்திக்கொண்டு போருமென்று கீழ்ச்சொன்ன ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் சரீராத்மபாவ மென்கிறார். வ்ருக்ஷத்திலே தேவதத்தன் நின்றானென்றால் அங்கு சரீராத்மபாவமில்லை, ஜாதிகுணங்கள் வ்யக்தியிலே கிடந்ததென்றால் அங்கு சரீராத்மபாவமில்லை; விசிஷ்டத்திலேயிறே சரீராத்மபாவம் கொள்ளலாவது.

[திடவிசும்பு]—இதுதான் அல்லாதவற்றிலும் ஏறி, 'த்ருடமான எரி, த்ருடமான காற்று' என்று கிடக்கிறதாகவுமாம்; அன்றிக்கே *ஆத்மந ஆகாசஸ் ஸம்பூத:* என்று சொல்லுகிறபடியே அல்லாத பூதங்களுக்கு முன்னே யுண்டாய், அவை அழிந்தாலும் சிலநாள் நிற்கக்கடவதாகையாலே த்ருடமான விசும்பென்னவுமாம; அன்றிக்கே, *சத்வார்யேவ பூதாநி* என்கிறவனை நிராகரிக்கிறாராகவுமாம். ஆக, பூதபஞ்சகங்களையும் சொல்லுகிறது. [இவைமிசை படர் பொருள் முழுவதுமாய்] - இவற்றை அடியாகக்கொண்டு மேலே விஸ்த்ருதமாகாநின்றுள்ள பதார்த்தங்களெல்லாவற்றையும் உண்டாக்கி. 'ஆய்' என்றது - ஆக்கி என்றபடி. 'ஆய்' என்பானென்? என்னில் ;—*பஹு ஸ்யாம்* என்கிற தன் ஸங்கல்பமே யாகையாலே, வைதிக நிர்த்தேசம் இருக்கிறபடி. [அவையவைதொறும்] அவ்வோ பதார்த்தங்கள் தோறும், அவற்றிலே வ்யாபிக்குமிடத்தில் பல தூணுக்காக ஒரு உத்தரம் கிடந்தாப்போலேயன்றிக்கே

ஜாதி வ்யக்தி தோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமா போலே எல்லாவற்றிலும் தனித்தனியே குறைவற வ்யாபித்து நிற்கும். இப்படி வ்யாபித்து நிற்குமிடத்தில், [உடல்மிசை உயிரென] - இச்சரீரத்துக்கு ஆத்மா தாரகனும் நியாமகனும் சேஷியாயிருக்கிறப்போலே இச்சரீராத்மாக்களுக்குத் தான் தாரகனும் நியாமகனும் சேஷியாயிருக்கும். [கரந்து] - இப்படியிருக்கச்செய்தே *யமாத்மா நவேத* என்கிறபடியே அங்யைரத்ருச்யனுமிருக்கும். [எங்கும் பரந்து] - அந்தர்பஹிச்ச வ்யாபித்து. இதில் ப்ரமாணமென்? என்னில், - [உளன் சுடர்மிகு சுருதியுள்] - அபௌருஷேயமாய் நிர்த்தோஷமாயிருக்கிற வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும். ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள்போலே ஹேத்வந்தரத்தாற் கழிக்கவொண்ணாத ஒளியையுடைத்தாயிருக்கை. சுருதி - பூர்வ பூர்வோச்சாரணக்ரமத்தைப் பற்றி உத்தரோத்தரோச்சார்யமாணத்வத்தைப் பற்றச் சொல்லுகிறது. இத்தால் முதற்பாட்டுத் தொடங்கிச் சொன்ன அர்த்தங்களுக்கெல்லாம் ப்ரமாணம் நிர்த்தோஷச்ருதி என்கிறது. [இவையுண்ட சுரன்] - இவற்றை ஸம்ஹரித்த தேவன். முன்பே ஸ்ருஷ்டி ஸ்திதிகள் அவனதீநமென்று சொல்லிற்று; ஸம்ஹாரம் வேறொரு சேதநாதீநமாகில் இது தன்னதல்லாமையால் வரும் ஐச்வர்யம் குறையுமிறே; அதுக்காக ஸம்ஹாரமும் அவனிட்ட வழக்கு என்கிறார். இத்தால், ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை ப்ரஹ்மாதிகளே நடத்துகிறார்களென்கிற குத்ருஷ்டிகளை நிரஸிக்கிறார். 'திடவிசும்பு' என்கிற இத்தால், அவைதிகமர்யாதையிலே நடக்கிற லோகாயதிகளை நிரஸிக்கிறார். 'உடல் மிசையுயிர்' என்கிற இத்தால், ஸ்வரூபேண தாதாத்ம்யம் சொல்லுகிறவர்களை நிரஸிக்கிறார். 'சுடர்மிகுசுருதியுள்' என்கையாலே, நாராயணாநுவாகாதிகளிற் சொல்லுகிற பரத்வம், லக்ஷ்மீஸம்பந்தம் இவையெல்லாவற்றையும் அங்கீகரித்தாராகிறார்.

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும்*
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன்*
புரமொருமூன்றெரித்து அமரர்க்குமறிவியந்து*
அரனயனென உலகழித்தமைத்துளனே. (8)

ஓ.—எட்டாம்பாட்டு. இப்பாட்டில் இப்படி ச்ருதிஸித்தனான ஸர்வேச்வரனுகிறான் ஸ்ருஷ்டி ஸம்ஹாரகர்த்தாக்களாக ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ராதிகளிலே ஒருவனன்றோ? என்று சொல்லுகிற குத்ருஷ்டிகள் நிரஸிக்கப்படுகிறார்கள்.

[சுரரென்று தொடங்கி] - ப்ரஹ்மாதிகள் அறியவொண்ணாத ஸ்திதியையுடைத்தாயிருந்த ப்ரக்ருதி தொடக்கமாக மேலுள்ள ப்ராக்ருதபதார்த்தங்களெல்லாவற்றுக்கும் வரிஷ்டமான காரணமாய். விண் என்று - ப்ரக்ருதிகார்யமான ஆகாசவாசிப்தத்தைக் காரணமான ப்ரக்ருதியிலே ப்ரயோகிக்கிறார். [அவைமுழுதுண்ட] - ஈச்வரனாலும், அவன் காட்டின வழியையுடைய ப்ரஹ்மாவாலும் ஸ்ருஷ்டமான பதார்த்தங்களில் ருத்ரனால் ஸம்ஹார்யமாவது ஏகதேசம்; ஸம்ஹர்த்தாவான ருத்ரன் தன்னையும், அவனுக்கு நிலமன்றிக்கே யிருந்துள்ள மஹதாதிகளையும் அகப்பட ஸம்ஹரித்தவன். [பரபரன்] - அவன் காட்டின வழியாலே ஏகதேசஸ்ருஷ்டியையும் ஏகதேசஸம்ஹாரத்தையும் பண்ணுகையாலே அஸ்மதாதிகளைக்காட்டில் பரராயிருக்கிற ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிலமல்லாத ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணுகையாலே அவர்களுக்கும் பரனென்றவாறு. [புரமொரு மூன்றெரித்து என்று தொடங்கி] - ருத்ரன் த்ரிபுரதஹநம்பண்ணினுனென்றும், ப்ரஹ்மா வைதிகஜ்ஞாநத்தை தேவர்களுக்கு உபதேசித்தா னென்றும் அவர்களுக்கு ப்ரஸித்தியைக் கொடுத்து, அந்தராத்மதயா நின்று தானே அவ்வுபகாரங்களை லோகத்துக்குப் பண்ணினுப்போலே ஸமஸ்தஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் தானே செய்தருளுகையாலே வேறேயும் சிலர் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணுவாருண்டென்று சொல்ல முடியாது.

இ.—எட்டாம்பாட்டில், இப்படிச்ருதிப்ரஸித்தனான ஸர்வேச்வரனாகிறான் ஸ்ருஷ்ட்யாதிகளிலே ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ராதிகளிலே ஒருவனானாலோ? என்கிற குத்ருஷ்டிகளை நிரஸிக்கிறார்.

[சுரர் அறிவரு நிலை விண்] - ப்ரஹ்மாதிகளால் அறிய அரிதான ஸ்திதியையுடைய முதல் ப்ரக்ருதி. கார்க்கிவித்யையில் "கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்ச" என்று ஆகாச சப்தத்தாலே முதல் ப்ரக்ருதியைச் சொல்லுகையாலே, இங்கும் ஆகாச சப்தத்தாலே மூலப்ரக்ருதியை அருளிச்செய்கிறார். [விண்முதல் முழுவதும் வரன்முதலாய்] - மூலப்ரக்ருதி தொடக்கமான மேலுள்ள பதார்த்தங்களெல்லாவற்றுக்கும் வரிஷ்டமான காரணமாய். வரன் - வரம். [அவை முழுதுண்ட] - ஈச்வரனாலும் அவனடியாக ப்ரஹ்மாவாலும் ஸ்ருஷ்டமான பதார்த்தங்களில் ருத்ரனால் ஸம்ஹார்யமாவது ஏகதேசம்; ஸம்ஹர்த்தாவான ருத்ரனையும், அவனுக்கு நிலமல்லாத மஹதாதிகளையும் அகப்பட ஸம்ஹரித்தவன். [பரபரன்] - ஈச்வரனடியாக ஏகதேச ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணுகிற ப்ரஹ்மாதிகள் அஸ்மதாதிகளில் பரர்; அந்த ப்ரஹ்மாதிகளுக்கும் பரனாகையாலே பராத்பரன். [புரமொருமூன்று எரித்து என்று தொடங்கி] - ருத்ரனுக்கு அந்தர்யாமியாய்க் கொண்டு த்ரிபுரதஹநம் பண்ணி, ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்நின்று வைதிகஜ்ஞாநத்தை தேவர்களுக்கு உபதேசித்து. இயந்து - ஈந்து; அறிவையீந்து. [அரன் அயனென] - த்ரிபுரதஹநம்பண்ணினான் ருத்ரனென்றும், வைதிகஜ்ஞாந ப்ரவர்த்தகன் ப்ரஹ்மாவென்றும் அவர்களுக்கு ப்ரஸித்தியைக் கொடுத்தாப்போலே. [உலகழித்து அமைத்துளனே] ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று அண்டாந்தர்வர்த்திகளை ஸ்ருஷ்டித்தும், அவனுக்கு நிலமல்லாத ப்ராக்ருத ஸ்ருஷ்டியை ஸ்வேநரூபேண பண்ணியும், ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனாலே ஸம்ஹார்யமான அம்சத்தை ஸம்ஹரித்தும், அவனுக்கு நிலமல்லாத ப்ராக்ருத ஸம்ஹாரத்தை ஸ்வேநரூபேண பண்ணினான ஸர்வேச்வரனே. "ஏதௌ த்வௌ விபுதச்ரேஷ்டௌ" இப்படி ஸமஸ்தஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் தானேசெய்கையாலே வேறேயும் சிலர் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்குக் கடவாருண்டென்று சொல்ல முடியாது. சுரரறிவருநிலை விண்முதல் முழுவதுக்கும் வரனமுதலாய அவை முழுதுண்ட பரபரன அரனெனப் புரமொருமூன்றெரித்து உலகழித்து, அயனென அமரர்க்கு அறிவியந்து உலகமைத்துமுளன். "விஷ்ணுராத்மா பகவத:".

ஈடு.—எட்டாம்பாட்டு—[சுரர் இத்யாதி] - ச்ருதிஸித்தன் அவனேயென்றும், ஸர்வசரீரியாய் நிற்கிறான் அவனே யென்றும் சொல்லாநின்றீர்; அல்லாதாரும் ஒரோ கார்யங்களிலே அதிகரித்துஅவையும் நடத்தியன்றோ போருகிறது? ப்ரஹ்மா ஸ்ருஷ்டிக்குக் கடவனாய் ருத்ரன் ஸம்ஹாரத்துக்குக் கடவனாயன்றோ போருகிறது; இவற்றை ஒரு வ்யக்தியிலே ஏறிட்டால் நீர் பக்ஷபாதத்தாலே சொன்னீராகீரோ? என்ன, - 'ஒரு வ்யக்தியிலே பக்ஷபாதத்தாலே சொல்லுகிறேனல்லேன்; ப்ரமாணகதிகளை யாராய்ந்தால் அவை அவர்கள் பக்கலில் கிடவாமையாலே சொல்லுகிறேன்' என்கிறார்.

[சுரர் இத்யாதி] - ப்ரஹ்மாதிகளால் அறியவரிய ஸ்வபாவத்தை யுடைத்தாயிருக்கிற விண் உண்டு - மூலப்ரக்ருதி: அது தொடக்கமாக வுண்டான எல்லாவற்றுக்கும் வரிஷ்ட்டமான காரணமாய். *அக்ஷரமம்பராந்தத்ருதே:* என்று அம்பராந்தமென்று சொல்லக்கடவதிறே; கார்க்கி வித்யையிலே கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்ச* என்று ஆகாசசப்தத்தாலே மூலப்ரக்ருதியைச் சொல்லுகையாலே இவரும் ஆகாச சப்தத்தாலே மூலப்ரக்ருதியை அருளிச்செய்கிறார்: ப்ரக்ருதிகார்யமான ஆகாசவாசி சப்தத்தை யிட்டுக் காரணமான மூலப்ரக்ருதியை உபசரிக்கிறது. [வரன் முதலாய்] - காரணதசையிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்துத் தன்மேலே யேறிட்டுக்கொண்டு நோக்கியும், கார்யமாமளவிலே வந்தவாறே அவ்யக்தம் மஹாந் அஹங்காரம் என்கிற இவற்றிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்தும், காரண பரம்பரையோடு கார்யபரம்பரையோடு வாசியறத் தானேநின்று நடத்திக்கொண்டு போருகையாலே வரிஷ்ட்டமான காரணமாய் என்கிறது. [அவை முழுதுண்ட] - ஸம்ஹாரத்திலும் வந்தால் முழுக்க ஸம்ஹார்த்தாவாகிறானும் அவனே. *யஸ்ய ப்ரஹ்மச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:, ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம்* - யாவனொருவனுக்கு ப்ரஹ்மக்ஷத்ராத்மகமாயிருக்கிற

இதெல்லாம் ஓதநமாயிருக்கிறது, யாவனொருவனுக்கு ம்ருத்யு உபஸேசந கோடியிலே நிற்கிறான். *கஇத்தாவேத யத்ரஸ:* - அப்படி யிருக்கிறவன்பெருமை ஒருவர்க்கும் அறிய நிலமோ? என்று நின்றதிறே. [பரபரன்] - ப்ரஹ்மாதிகள் அதிகாரிபுருஷர்களா யிருக்கையாலே நம்மைக் குறித்து அவர்கள் பரராயிருப்பதொன்று உண்டிறே, *பர: பராணும்* என்கிறபடியே அவர்கள் தங்களுக்கும் பரனாயிருக்குமவன். "மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்குத் தேவா" என்னக்கடவதிறே. [புரம் இத்யாதி] - ருத்ரன் த்ரிபுரதஹநம் பண்ணினா னென்றும்; [அமரர்க்கு மறிவியந்து] - அறிவை ஈந்து. அன்றிகே வியத்தல் - கடத்தலும், கொடுத்தலு மாகையாலே அறிவைக் கொடுத்து என்னவுமாம். ப்ரஹ்மா தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினா னென்றும் ஒருப்ரஸித்தி யுண்டிறே நாட்டிலே அவர்களுக்கு; அங்ஙனன்றோ? என்னில் ;—அவற்றை ஆராய்ந்தால் *விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:, தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸவிஷேஹே மஹேச்வர:* என்றுநின்றார்களிறே அத்தை அடியறிவார். "நண்ணார் நகரம் விழ நனிமலை சிலைவளைவுசெய் தங்கழனிற வம்பதுவானவனே" என்றுநின்றார்களிறே மயர்வற மதிநலமருளப்பெற்றவர்கள்; தான் பூட்டின நாணி, தன் கழுத்தை யறுத்துக் கொண்டு போகா தொழியும்போதும் ஈச்வரன் அந்தராத்மாவாய் நிற்கவேணும். ப்ரஹ்மா தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினானென்று ஒரு ப்ரஸித்தி யுண்டு; அதுக்கு அடி ஆராய்ந்தால் *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்* என்கிறபடியே அவன் அடியாயிருக்கும். [அரன் இத்யாதி]-அரன் செய்தான், அயன் செய்தானென்ன உலகழித்தமைத்துளன். சுரரறிவருநிலை விண்முதல் முழுவதும் வரன்முதலாய் அவை முழுதுண்ட பரபரன் அரனெனப் புரமொருமூன்றெரித்து உலகத்தையழித்து, அயனென அமரர்க்கும் அறிவியந்து உலகத்தை யமைத்துளன். *ஏதௌ த்வௌ விபுதச்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌஸ்ம்ருதௌ, ததாதர்சித பந்தாநௌ ஸ்ருஷ்டி ஸம்ஹாரகாரகௌ* என்கிறபடியே ப்ரமாணகதிகள் இருந்தபடியால் ஏகதேச ஸ்ருஷ்டியும் ஏகதேசஸம்ஹாரமுமே ப்ரஹ்மாதிகளுக்கு உள்ளது; அது தானும் இவர்களுக்கு அந்தராத்மாவாய்நின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணுகிறான் ஸர்வேச்வரனாகையாலே சொன்னேனத்தனை, ஒரு வ்யக்தியில் பக்ஷபாதத்தாலே சொன்னேனல்லேன் என்று குத்ருஷ்டிகளை நிரஸிக்கிறார்.

உளனெனிலுளன் அவனுருவமிவ்வுருவுகள்*
உளனலனெனில் அவனருவமிவ்வருவுகள்*
உளனெனவிலனென இவைகுணமுடைமையில்*
உளனிருதகைமையொடு ஒழிவிலன்பரந்தே* (9)

௯.—ஒன்பதாம்பாட்டில், இப்படி ப்ரமாணமும் ப்ரமேயமும் ஒருபடி உளவாகக்கொண்டு ஈச்வர ஸ்வரூபத்திலும் ஈச்வரவிசேஷணத்திலும் விப்ரதிபத்தி பண்ணின வாதிகளையெல்லாம் நிராகரித்து, 'ப்ரமாணமுமில்லை, ப்ரமேயமுமில்லை, ஸர்வமும் சூந்யம்; ஆதலால், வேதமுமில்லை, வேதப்ரமேயமாயுள்ள ஈச்வரனும் அவனுடைய விபூதியாயுள்ள ஜகத்து மில்லை' என்கிற சூந்யவாதியை நிராகரிக்கிறது.

எங்ஙனேயென்னில்;—சூந்யவாதியான உன்னைக் கேட்போம்: ஈச்வரன் இல்லாமையை ஸாதிக்க நினைக்கிற நீ நினைத்த பொருளை ஒருவாக்யத்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணி, பின்னை ஹேதுவாலே அத்தை ஸாதிக்கவேணுமிறே; அவ்விடத்தில் நீ ஹேது சொல்லுவதற்கு முன்பே உன் ப்ரதிஜ்ஞையைக்கொண்டு ஈச்வரனுள னென்னுமிடமே ஸாதிப்பன்; அதுக்காக ஈச்வரனுடைய இன்மையை ப்ரதிஜ்ஞை பண்ணுவது உளனென்ற சொல்லாலேயோ? இலனென்ற சொல்லாலேயோ? என்ன, இப்படிக் கேட்கைக்குக் கருத்தென்? என்னில்,—உளனென்ற சொல்லால் இன்மையைக் காட்டவொண்ணாதாப்போலே இலனென்ற சொல்லால் நீ கிற்ற நினைத்த இன்மை காட்டவொண்ணா தென்றவாறு. அது எங்ஙனே யென்னில்,—உண்டென்ற சொல்லாலும் இல்லை யென்ற சொல்லாலும் லோகத்தில் யாதொருபொருள் விளையக் கண்டோம், அப்பொருளே உன் சொற்களுக்கும் பொருளாக வேணுமிறே; கண்டறியாததொரு பொருளை இச்சப்தங்கள் காட்டமாட்டாதிறே; லோகத்தில், குடமுண்டென்றால் குடமென்று சொல்லப்

படுகிற பொருள் உண்மை யென்பதொரு தர்மத்தை யுடைத்தென்று தோற்றுநின்றது; அவ்விடத்தில் குடமாவது - மண்ணாலே பண்ணிற்றென்று. அதினுடைய உண்மையாவது-மண்ணும் உருண்டையுமன்றியே இரண்டுக்கும் நடுவில் அவஸ்தையாய் வயிறும் வாயும் உடைத்தான மண்ணாயிருக்கை. இப்படியால், ஈச்வரனுளனென்னில் உளனாய் வரும்; இச்சொல்லால் அவனுடைய இன்மை காட்டவொண்ணாது. இப்படி ஈச்வரனுள னென்னவே, ஐச்வர்யத்தையொழிய ஈச்வரன் உளனாகக் கூடாமையால் அவனுடைய விபூதியான ஜகத்தும் உண்டாம்; ஆமிடத்திலும் அவனுக்கு சரீரமாயே உளதாம். இப்பொருள் "அவனுருவமிவ்வுருவுகள்" என்றவிடத்தாலே சொல்லப்பட்டது. இனி, ஈச்வரன் இலனென்ற சொல்லாலே அவனுடைய இன்மை காட்ட நினைத்தாயாகில், இல்லையென்ற பொருளிலும் லோகத்திற் கண்டபடி பொருள்கொள்ளவேணும். லோகத்தில் குடமில்லையென்றால், இங்கில்லை யென்னுதல், இப்போதில்லை யென்னுதல், மண்ணுருண்டையா யிருந்தது குடமாய்ப் பிறந்த தில்லையென்னுதல், தளர்ந்து ஓடுகளாய்க் கிடந்ததென்னுதல், இவ்வனைத்திலொன்று பொருளாகக் கண்டோம்; இப்படியன்றியே, வெறுமனே குடமில்லையென்னில், என்றும் எங்கும் எப்படியும் குடமில்லையென்று சொல்லிற்றாக வேணும்; அப்படியாகில், எப்படியும் குடமென் றொன்று அறிய உபாயமில்லை யாகையால் குடமென்று சொல்லவுங் கூடாது, நினைக்கவுங் கூடாது. ஆதலால், ஒன்றில்லை யென்பானுக்கு ஒருபடியாயின்றியே மற்றப்படியாலுண்டாக இசையவேணும்; ஆதலால், இங்கில்லை யென்றது - அப்பாலேயுண்டு என்றவாறு. இப்போதில்லையென்று - மற்றொருபோது உண்டு என்றவாறு. குடமில்லையென்றது - மண்ணுருண்டையாதல், ஓடுகளாயாதல் இருந்த தென்றவாறு. இப்படியால் இன்மையாவது - மற்றொருபடியா லுண்மையாய்த் தோற்றிற்று. இப்படியால் ஈச்வரனில்லை யென்றானுக்கும் அவன் தன்னையும் அவனைச்வர்யங்களையும் ஒருபடியால் உளவாகக் கொண்டு, அப்படியால்உண்மை இல்லையென்ற சொல்லாலே சொன்னானாகவேணும்; ஆதலால், உளனென்ற சொல்லால் அவனும் அவனைச்வர்யமும் ஸித்தித்தாற்போலே இலனென்ற சொல்லாலும் அவன்தன்னுடைய உண்மையும் அவனைச்வர்யத்தின் உண்மையும் ஸித்தமாய் வந்தது. இப்பொருள் - உளனலனெனில் அவனருவம் இவ்வருவுகள் என்றத்தால் சொல்லப்பட்டது. அவனருவமென்றது - அபாவமென்ற சொல்லாலே சொல்லப்பட்டதான உளதாயிருந்த அது என்றவாறு. இப்படியால் உண்மையும் இன்மையுமாகிறன உள்ள வஸ்துவுக்கே இரண்டு குணமாய் முடிந்தன. ஆதலால், ஈச்வரனுள னென்றாதல், இலனென்றாதல், இரண்டுபடியாலுமுளனாம். இவ்வழியாலே வேத முண்டாயிற்று; அதிற் சொன்னபடியே அவன்தான் எங்கும் பரந்துளனானான். இப்பொருள் இப்பாட்டில் மேலிரண்டடியாலுஞ் சொல்லுகிறது. இப்பாட்டு ஆழ்வான் யோஜித்தபடி.

இ.—ஒன்பதாம்பாட்டு. ஒருபடியாலே ப்ரமாணப்ரமேயங்களைக்கொண்டு ஈச்வரஸ்வரூபத்திலும் ஈச்வரவிசேஷணத்திலும் விப்ரதிபத்தி பண்ணினவர்களை நிராகரித்தது கீழ்; இப்பாட்டில் ப்ரமாணப்ரமேயங்களிரண்டு மில்லை யென்ற சூந்யவாதியை நிராகரிக்கிறது; சூந்யவாதியை ஹேது சொல்லுவதுக்குமுன்பே ப்ரதிஜ்ஞாமாத்ரத்திலே ஸவிபூதிகனான ஸர்வேச்வரனுடைய உண்மையை ஸாதிக்கிறார்.

[உளனெனில்] - உளனென்று ப்ரதிஜ்ஞையாகில். [உளன்] - அஸ்தித்வ விசிஷ்டனாய்க்கொண்டு உளனாம்; ஈச்வரன் உளனாம்போது ஐச்வர்யத்தையொழிய உளனாகக்கூடாமையாலே விபூதியான ஜகத்தும் உண்டாம். [அவனுருவம் இவ்வுருவுகள்] - உண்டாமிடத்தில், ப்ரமாணம் காட்டுகிறபடியே சரீரமாய்க் கொண்டு உளவாம். 'இல்லாமையை ஸாதிக்கிற நான் அஸ்திசப்தத்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணுவனோ?' என்னில்,—'உளன்' என்கிற சப்தம் இல்லாமையைக் காட்டமாட்டாதோபாதி, 'இல்லை' என்கிற சப்தமும் நீ நினைக்கிற அத்யந்தாபாவத்தைக் காட்டமாட்டா தென்கை. [உளனலனெனில்] - நாஸ்திசப்தத்தாலே அவனுடைய இல்லாமையை ப்ரதிஜ்ஞை பண்ணில், லோகத்தில் நாஸ்தி சப்தார்த்தமே உனக்கும் அர்த்தமாகவேணும்; கடோ நாஸ்தி யென்றால், இங்கில்லை யென்னுதல், இப்போதில்லை யென்னுதல், ம்ருத்பிண்டமாய் உத்பத்த்யபாவத்தாலே இல்லையென்னுதல், கபாலாவஸ்த்தமா யில்லை யென்னுதல். இவற்றிலே ஒன்று -நாஸ்தி சப்தார்த்தமாகக் கண்டோம்; ஆகையாலே, ஒருபடியாலே இல்லையானது ப்ரகாராந்தரத்தாலே உண்டாயிருக்கையால், ஈச்வரனும் நாஸ்தித்வ விசிஷ்டனாய்க்கொண்டு உளனாம். [அவனருவம் இவ்வருவுகள்] - அவனுடைய விபூதியும் ஒருப்ரகாரத்தாலே இல்லையானவை ப்ரகாராந்தரத்தாலே உண்டாகையாலே அபாவவிசிஷ்டமாய்க் கொண்டு உளவாம். [உளனென இலனென இவைகுணமுடைமையில்] -

அஸ்தித்வ நாஸ்தித்வங்கள் உள்ள வஸ்துவுக்கு இரண்டுங் குணமாய் முடிகையாலே. [உளனிருதகைமை யொடு] - ஈச்வரன் உளனென்ருதல், இலனென்ருதல், இரண்டுபடியாலு முளன். [ஒழிவிலன்பரந்தே] - இவ்வழியாலே விபூதியையும் வ்யாபித்துக் கொண்டே யொழிவிலன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு—ஸர்வசூந்யவாதியை நிரஸிக்கிறுர். நிரஸிக்கிறபடிதான் என்? என்னில்,—பாஷ்யத்திலே சூந்யவாதியை நிரஸித்த க்ரமத்திலே. இவ்வாழ்வார்தாம் அடியாக பாஷ்யகாரர்க்கு அவனை நிரஸிக்கலாம்; இவர்தாம் அவனை நிரஸிக்கைக்கு அடியென்? என்னில்;—அதுவும் இவ்வாழ்வார்தம்பக்கலிலே யுண்டு. புறம்பே சிலர் ப்ரஹ்மாதிகள் பக்கலிலே ஈச்வரத்வ ப்ரதிபத்தியைப் பண்ணி, ப்ரமாணங்களையும் அதுக்கீடாக நியமித்துக் கொண்டு வந்து தோற்ற, தாம் அங்கீகரித்தவனே ஸர்வஸ்மாத்பர னென்றும், ஜகத்து அவனுக்கு சரீரதயா சேஷமென்றும், தத்ப்ரதிபாதகப்ரமாணம் வேத மென்றும் தம்முடைய மதத்தை உபந்யஸித்துநின்ருர் இ(ரே); இவையித்தனையும் இல்லையென்னும்போது பூர்வபக்ஷமாக இவற்றை அங்கீகரித்து அநுபாஷித்துக் கழிக்கவேணுமிறே; அதில் இவற்றை அங்கீகரித்து அநுபாஷித்து அவனுல் இல்லையென்னப் போகாது: முதலிலே சூன்யமென்னில் ஸர்வசூன்யவாதம் ஸித்தியாது. இனி உன்னைக்கேட்போம்; நீதான் ஈச்வரன் உளனென்கிற சொல்லாலே அவனில்லாமையை ஸாதிக்கப்பார்க்கிருயோ? இல்லையென்கிற சொல்லாலே இல்லாமையை ஸாதிக்கப்பார்க்கிருயோ? என்ன, இங்ஙன் விகல்பிக்கைக்குக் கருத்தென்? என்ன; உளனென்கிற சொல்லாலே சொன்னுல், உனக்கு அபிமதமான அபாவம் ஸித்தியாதவோபாதி, இல்லையென்கிற சொல்லாலும் உனக்கு அநபிமதார்த்தமேகாண் ஸித்திப்பது: ஆனபின்பு, நீ இல்லையென்கிற சொற்கொண்டே அவனுண்மையை ஸாதிப்பன். லோகத்தில் பாவாபாவசப்தங்களுக்கு யாதொருபடி பொருள் கொள்ளுகிறோம், அப்படிகொள்ளில் நீ நினைக்கிற அர்த்தம் உன்னுல் ஸாதிக்கப்போகாது; அங்ஙனேகொள்ளாயாகில் வாதந்தன்னில் உனக்கு அதிகாரமில்லை.

[உளனெனில்] - ஈச்வரஸத்பாவம் முதலிலே இல்லை யென்கிற நீ அவனுண்மைக்கு இசையாயிறே; நான் உளனென்கிறப்போலே சொல்லில்தானே உளன். [அவனுருவம் இவ்வுருவுகள்] - சிதசித்ரூபமாகவன்றிறே ஈச்வரன் உளனாவது; அவன் உளனாமிடத்தில் *யஸ்யாத்மா சரீரம்* யஸ்ய ப்ருதிவீ சரீரம்* என்கிறபடியே ஜகத்து அவனுக்கு சரீரதயா சேஷமாயுண்டாம். உளனலனென்பாயோ? அப்போது அபாவதர்மியாய்த் தோற்றும். [அவனருவம் இவ்வருவுகள்] - அப்போது நாஸ்திசப்தவாச்யமாய் அவஸ்தாந்தர பாக்காய்க்கொண்டு இவற்றின் உண்மை தோற்றும். 'கடோZஸ்தி' என்றால் வாயும் வயிறுமான ஆகாரந் தோற்றும்; 'கடோ நாஸ்தி' என்றால் நாஸ்தித்வதர்மவிசிஷ்டமாய்த் தோற்றும்; இங்கு இல்லை யென்றதாகில் வேறோரிடத்திலே யுண்டாம்; இப்போது இல்லையென்றதாகில், வேறொரு காலவிசேஷத்திலே யுண்டாம்; எங்கும் எப்போதும் ஒரு ப்ரகாரத்தாலும் கடமில்லையென்னக்கூடாமையால், நிருபாதிகநிஷேத மில்லையிறே. [உளனென இலனென இவைகுணமுடைமையில்] - உளனென்கிற இத்தையும் இலனென்கிற இத்தையும் இவையிரண்டையுங் குணமாகவுடையனாகையாலே. இவையிரண்டும் இரண்டு தர்ம மாயிற்று. [உளனிருதகைமையொடு] - உளனென்கிற சொல்லாலும் இலனென்கிற சொல்லாலுஞ் சொன்ன இரண்டு ஸ்வபாவத்தாலும் உளனானன். [ஒழிவிலன்பரந்தே] - நான் உளனென்கிற சொல்லாலே உண்மையை ஸாதித்தேன். நீ இலனென்கிற சொல்லாலே உண்மையை ஸாதித்தாய்; ஆக, இருவருமாக உண்மையை ஸாதித்தோம்; இனி அவன் உளனால் உளனாமாபோலே, ஸவிபூதிகனாயே உளனாக அமையாதோ? என்கிருர்.

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன்*
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவற*
கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ்பொருடொறும்*
கரந்தெங்கும்பரந்துளன் இவையுண்டகரனே* (10)

ஒ.—பத்தாம்பாட்டில், கீழ்ச்சொன்ன பகவத் வ்யாப்தியினுடைய ஸௌகர்யத்தை அருளிச் செய்கிறார்.

[பரந்த என்று தொடங்கி] - பரந்து குளிர்ந்திருந்த கடலில் ஜலபரமாணுதோறும் அஸங்குசிதமான அண்டாவகாசத்திற் போலே வ்யாபித்திருக்கும். [நிலவிசும்பு என்று தொடங்கி] - இப்படி எல்லா பூதங்களிலும் பௌதிகமான க்ஷுத்ரசரீரங்களிலும் ததந்தர்வர்த்திகளாய் ஸ்வயம்ப்ரகாசமாயுள்ள ஆத்மாக்கள்தோறும் அந்தர்யாமித்வத்தைக்கொண்டு ஸமஸ்த வஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கும். இவற்றை யெல்லாவற்றையும் தன்திருவயிற்றிலே வைத்து ஸம்ஹரித்தவன்கிடீர் பரமாணுக்களிலும் வ்யாபித்துநிற்கிறானென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், கீழ்ச்சொன்ன பகவத்வ்யாப்தியினுடைய ஸௌகர்யத்தைச் சொல்லுகிறது.
[பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் பரந்த அண்டமிதென] - பரந்து குளிர்ந்த கடலில் ஜலபரமாணுக்கள்தோறும், சதுர்த்தசபுவநாத்மகமான அண்டாவகாசத்திலே ஓர் ஏகாகி வர்த்திக்குமா போலே அஸங்குசிதமாக வ்யாபித்திருக்கும். இதர பூதங்களிலும் வ்யாப்தி இப்படியே யென்கிறது. [நிலவிசும்பு] - முதலான பூமியையும், முடிவான ஆகாசத்தையுஞ் சொன்னபடி. இது அநுக்தமான பூதங்களுக்கும் உபலக்ஷணம். [ஒழிவற] - ஒன்றொழியாமே வ்யாபித்திருக்கும். பூதகார்யங்களில் அதிக்ஷுத்ரமான சரீர சரீரிகளிலு முண்டான வ்யாப்தி சொல்லுகிறது. [கரந்தசிலிடந்தொறும்] - அதிக்ஷுத்ர சரீரங்களிலும். [இடந்திகழ் பொருள்தொறும்] - ததந்தர்வர்த்திகளாய் ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மாக்கள்தோறும். [கரந்து] - அந்தர்யாமியாயிருக்கை. [எங்கும்பரந்துளன்] - இப்படி ஸமஸ்த வஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கும். [இவையுண்ட] - இவற்றை யெல்லாவற்றையும் தன்திருவயிற்றிலே வைத்து உபகரித்தவன். [கரன்] - இப்படி த்ருஷ்டப்ரமாண ஸித்தன். இப்படி எல்லாவற்றையும் தன் திருவயிற்றிலே வைத்து உபகரித்தவன்கிடீர், பரமாணுக்கள்தோறும் வ்யாபித்திருக்கிறானென்று கருத்து.

ஈடு.—பத்தாம்பாட்டு.—[பரந்த இத்யாதி.] ஜகத்தை சரீரதயா சேஷமாகவுடையனாய் எங்கும் வ்யாபித்து தாரகனாய் நியாமகனாய் சேஷியாயிருக்குமென்று கீழே சொன்னார்; இப்படி வ்யாபித்துநின்றால் அசித்ஸம்ஸர்க்கத்தாலே சேதநனுக்கு ஒரு ஸங்கோசம் பிறவாநின்றதிறே; அப்படியே அவனுக்கும் இவற்றோட்டை ஸம்ஸர்க்கத்தாலே ஸங்கோசம் பிறக்குமோ? என்னில்?—அது செய்யாது; அஸங்குசிதமாக வ்யாபித்துநிற்குமென்று வ்யாப்திஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

[பரந்ததண்பரவை இத்யாதி] - பரந்து குளிர்ந்திருந்துள்ள கடலில் ஜலபரமாணுக்கள் தோறும் வ்யாபித்திருக்கும். நீர்ச்செறிவாலே திரண்டுதோற்றுகிற வித்தனையிறே; பரமாணுஸங்காதமிறே. *ஜ்யாயாநந்தரிக்ஷாத்* என்கிற வஸ்து, ஜலபரமாணுக்களிலே வ்யாபியாநின்றால் அல்பாவகாசமாய் நெருக்குப்பட்டிருக்குமோ? என்னில், [பரந்தவண்டமிதென] - அந்த ஜலபரமாணுக்கள்தான் பரந்த அண்டமிதெனவாயிற்று வ்யாபித்திருப்பது. ஓரண்டத்தைச் சமைத்து, அதிலே ஓரேகாகியை வைத்தாற்போலே யிருக்கும். இப்படி ஜலபரமாணுக்களிலே வ்யாபித்துவிடுமித்தனையோ வென்னில். [நிலவிசும்பொழிவற] - பூம்யந்தரிக்ஷங்களிலும் அப்படியே. இவைமூன்றும் அஞ்சுக்கும் உபலக்ஷணமாய், அஞ்சாலும் ஆரப்தமான அண்டத்தளவும் நினைத்து, மேல் கார்யமான பதார்த்தங்களில் வ்யாபித்திருக்கும்படி சொல்லுகிறது. [கரந்த சிலிடந்தொறும்] - இமையோடு இமை பொருந்தும்போதைக் காற்றிலே முடியும்படியான ஸூக்ஷ்மமான அல்பசரீரங்கள் தோறும். [இடந்திகழ்பொருள் தோறும்] - அவ்வவசரீரங்களிலே ஜ்ஞாநைகநிரூபணமாய்க் கொண்டு மிளிருகிற ஆத்மாக்கள் தோறும். [கரந்து] - வ்யாப்யபதார்த்தங்களுக்குத் தெரியாதபடி அந்தர்யாமியாய்-[எங்கும் பரந்துளன்] - சேதநன் சரீரத்திலே வ்யாபிக்கும்போது அதில் ஏகதேசத்திலே நின்று ஜ்ஞாநத்தாலே எங்கும் வ்யாபிக்கக் கடவனாயிருக்கும்; இவன், அங்ஙனன்றிக்கே, ஸ்வரூபத்தாலே, எங்கும் வ்யாபித்திருக்கும். விபுத்வத்தை அவனுக்குச் சொல்லி, அணுத்வத்தை இவனுக்குச் சொல்லி, இதுக்குள்ளே அவன் குறைவற வ்யாபித்திருக்குமென்றால்,

அதுகூடுமோ? என்னில்,—[இவையுண்டகரனே] - சிறுவடிவைக்கொண்டு பெரியவற்றை யெல்லாந் தன்வயிற்றிலே வைத்தால் "தயிருண்ட பொன்வயிறு இவ்வேழுலகுமுண்டு மிடமுடைத்தால்" என்கிறபடியே பின்னையும் அவ்வயிறே இடமுடைத்தாம்படி யிருக்கவல்ல ஸர்வசக்தி சிறியவற்றிலே குறைவற இருக்க மாட்டானோ? என்கிறார் [கரன்] - இப்படி ஸூத்ருடப்ரமாண ஸித்தன். இவையுண்ட கரன் - பரந்ததண்பரவையுள் நீர்தொறும் பரந்த வண்டமிதெனப் பரந்துளன். நிலவிசும் பொழிவறப் பரந்துளன்; கரந்தசிலிடந்தொறுமிடந் திகழ்பொருள்தொறும் எங்குங்கரந்து பரந்துளன் என்று அந்வயம்.

கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை*
வரனவில்திறல்வலி அளிபொறையாய்நின்ற*
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல்*
நிரனிறையாயிரத்து இவைபத்தும்விடே* (11)

ஒ.—நிகமத்தில், ஸமஸ்தகல்யாண குணாகரனாய், நிரவதிகக்ருபாம்போதியாய், தனக்கு ஸத்ருசமான திவ்யதேஹத்தையு முடையனாய், ஹேயப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வங்களாலே சேதநாசேதநங்களிற்காட்டில் அத்யந்த விலக்ஷண ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனுமாய், ஸ்வாதீநமான அசேஷ சிதசித்ஸ்வரூபஸ்த்திதி சேஷ்டைகளையு முடையனாய், ஸமஸ்தஜகத்தையும் சரீரதயா சேஷமாக வுடையனாய், அப்ரதிபக்ஷமாம்படி வேதப்ரதிபாத்யனாய், வேதங்களில் பரராகச்சொல்லுகிற ருத்ராதிகளுக்கும் பரனாய், 'ப்ரமாணமு மில்லை. ப்ரமேயமு மில்லை' என்கிற சூந்யவாதிகளால் அவிசால்யமான தன்மையை யுடையனாய், பரமாணுக்கள் தோறும் புக்கு அணுதரனாய் வ்யாபிக்கவல்லனாய், ச்ரிய:பதியாய், நாராயணனான ஸர்வேச்வரனை தத்ப்ரஸாத லப்தையான ஜ்ஞாநத்ருஷ்டியாலே ஸாக்ஷாத்கரித்து, ததநுபவஜநித ஹர்ஷப்ரகர்ஷத்தாலே தனக்குத்தானே பிறந்து இவனுடைய ஏவம்வித பரத்வ ப்ரதிபாதகமாய், சப்தச்சேர்த்தியையும் அர்த்தபௌஷ்கல்யத்தையு முடைத்தா யிருந்துள்ள இப்பத்தும் எம்பெருமான்திருவடிகளிலே பரிசர்யாரூபமாகப் பிறந்தன என்கிறார்.

[கரவிசும்பென்று தொடங்கி] - ஸ்வபாவமான பூதபஞ்சகங்களையும், ததுபலக்ஷிதமான கார்யவர்க்கநித்யவிபூத்யாதிகளையு முடையனாகையாலே ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரன்திருவடிகளிலே. கரவிசும்பென்னுமிடத்துக்கு அல்லாத பூதங்களிற்காட்டில் அச்சதயா கரந்திருக்கை யென்றுஞ் சொல்லுவர்; திண்மை சொல்லிற்றாகவுமாம். நிரனிறை யென்கிற இடத்துக்கு - அர்த்தபௌஷ்கல்யமும் சப்த பௌஷ்கல்யமும். "பாதபத்தோZக்ஷரஸமஸ்தந்த்ரீலயஸமந்வித:" என்றாற்போலே சொல்லும் பொருளும் இசையுந் தாளமும் அந்தாதியும் அடைவே நிறுத்தப்படுகை யென்றுஞ் சொல்லுவர். பரனடிமேற்சொன்ன இவ்வாயிரத்து இப்பத்தும் மோக்ஷப்ரத மென்றுஞ் சொல்லுவர்கள்.

இ.—நிகமத்தில், இப்படி உபயவிபூதிநாதத்வமான பரத்வத்தை ப்ரதிபாதித்த இப்பத்தும் எம்பெருமான்திருவடிகளிலே பரிசர்யாரூபமாகப் பிறந்தன என்கிறது.

[கரவிசும்பு] - த்ருடமான விசும்பு. ஸூக்ஷ்மமான ஆகாசம். [எரிவளிநீர்நிலம்] - இந்தப் பூதங்களைந்தும் நித்யவிபூதிக்கும் ஸ்வகார்யமான அண்டாதிகளுக்கும் உபலக்ஷணம். [இவைமிசை வரனவில் திறல்வலியளிபொறை] - இந்த பூதங்களின் ஸ்வபாவமான, [வரனவில்] - இவ்வாகாச குணமாய் வரிஷ்டமான சப்தம். [திறல்] - அக்நியினுடைய ஸ்வபாவமான தாஹகத்வசக்தி. [வலி] - வாயுவினுடைய ஸ்வபாவமான பலம். [அளி] - ஜலத்தினுடையசைத்யத்தாலே வந்த தண்ணளி. [பொறை] - பூமியினுடைய ஸ்வபாவமான க்ஷமை. [ஆய்நின்றபரன்] - இந்த உபயவிபூதியையும் சரீரவத்ப்ரகாரமாக வுடையனாகையாலே ஸர்வஸ்மாத்பரன் [அடிமேற்குருகூர்ச்சடகோபன்சொல்] - திருவடிகளிலே பரிசர்யாரூபமாக அருளிச்செய்தது "வால்மீகிர் பகவாந் ருஷி:" என்னுமாபோலே தம்முடைய ஆப்தியைத் தாமே அருளிச்செய்கிறார். [நிரனிறை] - சப்தபௌஷ்கல்யமும் அர்த்தபௌஷ்கல்யமும். சொல்லும் பொருளும்

